# மேஜர் சாரியவர்கள் உதவுகிறார்கள்!!

நமது தபால் நிர்வாகத்தில் சில பிரிவுகளில் அதிகப்படியாக இருக்கும், சில சிப்பந்திகளை— அதாவது 2-5-54-ல் நடந்த பரீட்சையில் அமர்ந்து, பரீட்சை எழுதி, தேறி, கிளார்க் வேலைக்கும் அதை யொட்டிய வேலைகளுக்கும், உயர்த்தப்பட வேண்டிய அளவில் இருக்கும் சில சிப்பந்திகளை— சமீபத்திய P. M. G. அவர்களின் உத்திரவின்படி, உயர்விற்குக் கொண்டுவரப்பட்டு அதில் நிர்ணயம் செய்யப்படுவதற்கு முன்பு, காத்திருப்போர் பட்டியலில் அவர்களின் பெயர்களை வெளியிடப்படுகிறது ஆவனசெய்யவேண்டுமென்று, நமக்குப் புதியதோர் செய்தியொன்று கிடைத்திருகிறது. இது மிகமிக சந்தோஷப்படக்கூடிய சேதியாகும். இந்த உத்திரவின்படி அடுத்த உயர் பிரிவிற்குக் கொண்டுவரப்பட்டோரின் பட்டியலையும், P. M G. அவர்களின் உத்திரவின் நகலையும் சென்ற மாத நமது தூதனில் பிரசுரம் செய்திருக்கிறோம்.

இந்த நேரத்தில், முன்பொரு சமயம் நம்மவரின் உள்ளத்தில் அலைமோதிக்கொண்டிருந்த சந்தேகத்தைப்பற்றி அச்சத்தைப்பற்றி என் கவலையைப்பற்றக்கூடாமிந்த சமயத்தில் கவனப்படுத்த விரும்புகிறோம். அன்று அவர்கள் நினைத்த தல்லாம். டைரக்டர் ஜெனரலவர்களின் இது சம்மந்தமான, உத்திரவு தவறாகவும் உரை சொல்லவும் பயன்படுத்தப்படுமெனினும், தாம் அதிகப்படியாக ஒரு குறிப்பிட்ட பிரிவில் ஆய்விட்டபிறகு தமக்கு பிரமோஷன் கிடைக்காது, என்றும், மீண்டும் தங்களை பழையபடி பரீட்சை எழுதி தேறும் நிலைமைக்குக் கொண்டுவருவார்களென்றும் தான் அவர்கள் எண்ணினார்கள்! ஆனால் இந்த நிலைமை இன்று மாறிவிட்டது மிகமிக மதிப்புக்குரியது. அன்று முதல் இன்று வரையில் நமக்கு இந்த விஷயம் பற்றி இருந்த எண்ணமெல்லாம், பரீட்சையென்பது போட்டி முறையில் அமையக்கூடாது என்பதும், பாஸ் செய்யத்தக்க அளவில் மார்க்குகள் வாங்கி பிரமோஷன் பெறத்தக்க அளவில்தான் அது அமையவேண்டும் என்பதுதான். அந்த எண்ணம் இன்று பயன்தருவதாக அமைந்துவிட்டது. இலாகாவும் இதை ஏற்றுக்கொண்டு, 50% சதவிகித காலி வேலைகள் வரையில், இப்படி பாஸ் செய்யத்தக்க அளவில் மார்க்குகள் பெற்றவரைக்கொண்டு நிரப்பி விட்டு மீதமுள்ள பாஸ் செய்த சிப்பந்திகளுக்கும், பிரமோஷனை மறுக்காமல், அவர்களுக்கும் வேறு ஒரு பிரிவில், வேலையுயர்வு தேடித்தருவதென்பது முடிவு செய்திருப்பதானது இரு சாராருக்கும் மிகவும் நேர்மையின் பாற்பட்டதாகத்தான் தோன்றுகிறது. எனவே இந்த எண்ணத்தை ஆதரிக்கும் வகையில்தான், இந்த முறையும் தற்போது ஒப்புக்கொள்ளப்பட்டு இதற்கான வகையில் உத்திரவும் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது:—

இந்த உத்திரவை பிறப்பிக்க காரணமாயிருந்த நமது மதிப்புக்குரிய P. M. G. மேஜர் சாரி அவர்களை நாம் மனமார வாழ்த்துகிறோம்! நான்காம் வகுப்புச் சிப்பந்திகளிடம் மேஜர் சாரியவர்களுக்கு என்றும் மதிப்பும், அன்பும் இருந்துவருவதென்பது நம்மாலே மறுக்கமுடியாத உண்மையாகும்! அந்த அன்பின் காரணமாக அவர் செய்த இந்த மகத்தான உதவிக்கு நமது இதய பூர்வமான நன்றியையும் வணக்கத்தையும் செலுத்துகிறோம்! வாழ்க அவர் !! வளர்க அன்புள்ளவர்கள் !

---

# ஐம்பத்தைந்து - அறுபதாகுமா?

(R. எத்திராஜுலு நாயுடு)

இந்திய அரசாங்கம், அதன் சிப்பந்திகள் அனைவரையுமே, 55-வது வயதிலேயே ஓய்வு பெற்று விடும்படி வற்புறுத்துகிறது. ஆனால் வெளி நாடுகளிலே 'இதுபோன்ற அளவில் ஓய்வு பெறும் காலத்தை எவரும் நிர்ணயம் செய்திருப்பதாகத் தெரியவில்லை! ஆனால், இந்தியாவில்தான் துரதிஷ்டவசமாக ஓய்வு பெறும் காலத்தை 55-வது வயது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல; மற்றொரு துயரமும்; இந்த 55 வயதில் அவரை நெருக்கிக் காத்துக்கிடப்பது இன்னும் வேதனையைத்தான் அளிப்பதாக இருக்கிறது. அதாவது அவர் 55 வயதில் ஓய்வு பெறுவதற்கு முன், அவரை அரசாங்கம் வைத்தியப் பரீட்சைக்கு அனுப்பிவைக்கிறது. அதற்காக அவர் ரூ. 16-8-0-யை தன் சொந்தப் பணத்திலிருந்து தரவேண்டுமென்றும் அரசாங்கம் வற்புறுத்துகிறது. இவ்வளவு பணமும் கொடுத்து தொல்லையும்பட்டு, முடிவில் வைத்தியப் பரீட்சைக்குச் சென்றால், அங்கே வைத்தியர், எடுத்த எடுப்பில் இவருக்கு 'க்ஷயரோகமென்றோ' அல்லது வேறு ஏதோ கொடிய நோய் என்றோ மிக சுலபமாகச் சொல்லி அனுப்பிவிடுகிறார். இந்த டாக்டரின் பிரகடனமே ஒரு சிப்பந்தியை, அவர் எந்த ஒரு நோயால் கஷ்டப்படாதவராயிருந்தாலும் அவரை நோயுள்ளவராகச் செய்துவிடுகிறது. அந்த அளவுக்கு டாக்டரின் திடீர் அறிவிப்பு அவரைக் கொண்டுவந்து விட்டுவிடுகிறது. அவரும்

அந்த அதிர்ச்சி தாளாமலேயே இறந்துவிடவும் செய்கிறார். இதுதான் அரசாங்கத்தின்—குறிப்பாக நிர்வாகத்தின் முறையாக இருந்துவருகிறது. இந்த முறையை எனிவர்கள் மாற்றி யமைக்கக்கூடாது என்று கேட்கிறோம். உழைத்து உழைத்து இறுதியில் பலன் காணுதவர்களாக ஆக்கப்பட்ட இவர்களுக்கு இவர்களின் வாழ்வின் கடைசி காலத்திலாவது ஏன் இந்த சிறு உதவியை அரசாங்கம் செய்யக்கூடாது என்று கேட்கிறோம். எடுத்ததற்கெல்லாம் மேலைநாட்டை சுட்டிக்காட்டும் பண்புடையவர்கள், இந்த சிறு விஷயத்தில் ஏன் பிரிட்டன், அமெரிக்கா, சைனு போன்ற நாடுகள் கையாளுகின்றபடி, ஓய்வுபெறும் வயதை 60 என்று மாற்றியமைத்துக் கொள்ளக்கூடாது என்று கேட்கிறோம். இன்னும் சொல்லப்போனுல், சில நாடுகளில் ஓய்வுபெறும் வயதை நிர்ணயிக்காமல், அவர் திடகாத்திரமும் திறமையும் உள்ளவராயிருந்தால் 60-க்கும் மேலும் அவரை வேலையிலிருக்க அந்நாட்டு அரசாங்கம் அனுமதிக்கிறது. ஆனுல், இந்திய அரசாங்கத்திடமும், குறிப்பாக மந்திரியர் குழுவிடமும் இந்த சலுகையை நாம் எதிர்பார்க்காவிட்டாலும், குறைந்த பட்சம் இந்த ஓய்வுபெறும் வயதை 60 என்ருகிலும் ஏன் இவர்கள் ஆக்கக்கூடாது என்று கேட்கிறோம் இதையாவது இவர்கள் ஏன் செய்யக்கூடாது. உழைப்பின் பேராலும் உழைத்த நல்லவர்களின் சேவையாலும் தான் நாம் இதைக் கேட்கிறோம். இந்த சிறு சலுகையையாவது அரசாங்கம் தரத் தவருது என்று எதிர்பார்க்கிறோம். கட்டுண்டோம்-பொறுத்திருந்தோம்-காலமும்—அரசியலாரின் மனமும் மாறுமா இதுவிஷயத்தில் என்று இன்னமும் பொறுத்திருந்து பார்ப்போம்.

# திருக்குறளாருக்குப் பொன்னுடை!!

## சேலத்தில் ஏற்பாடு

சேலம் செப்டம்பர் 22:—டெல்லி சட்டசபை மெம்பர் திருக்குறளார் வி. முனுசாமி அவர்களுக்கு சேலத்தில் வருகிற நவம்பர் மாதத்தில் பொன்னுடை போர்த்தப்படும்.

இது சம்பந்தமாக ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது இந்த கமிட்டிக் கூட்டம் நேற்று, பி. ரத்தினசாமி பிள்ளை எம். எல். ஏ. தலைமையில் நடந்தது. பொன்னுடை போர்த்தும் விழாவை நாட்டுக் கச்சேரி முதலியவற்ருேடு சிறப்பாக நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

இதற்கான நிதி வசூல் செய்ய ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது.

### திருக்குறளாரின் தெளிவுரை:

கடந்த 12 6-55-ல் பாண்டியில நடந்த நமது முதல் மகாநாட்டில் சொற்பொழிவாற்றிய திருக்குறளாரின் பேச்சுச் சுருக்கம் கீழே தரப்பட்டிருக்கிறது:

இப்பொழுதுதான் சுதந்திரம் பெற்ற பாண்டிச்சேரியில் நாம் மகாநாடு கூட்டியிருக்கிறோம். இது ஒரு பொறுப்புள்ள மகாநாடு. இங்கே பல பிரச்சனைகளைப்பற்றி முடிவு கண்டாக வேண்டியிருக்கிறது. நம்முடைய மதிப்பிற்குரிய தலைவர் ராமானுஜமவர்களால் கடந்த 10 ஆண்டுகளாக நீங்கள் பல நன்மைகளை அடைந்திருக்கிறீர்கள். நான் பார்லிமெண்ட்டில் ஏதாவது செய்கிறேன்—பேசுகிறேன்—கேட்கிறேன் என்ருல் அது தலைவர் ராமானுஜம் அவர்களின் ஒத்துழைப்பினுலும், தோழர் P. M. கிருஷ்ணன் அவர்களின் ஒத்துழைப்பினுலுந்தான்

சமீபத்தில்தான் நம்முடைய மந்திரியார்களுக்கு எட்டும்படி நம்முடைய குறைகளைப்பற்றி பார்லிமெண்டியில் பேசினேன் நம்முடைய குறைகளைப் பொறுத்த மட்டில் மந்திரிகள் விநோதமாக வ நடந்து கொள்ளுகிருர்கள் எல்லாம் டைரைக்டர் ஜெனரலின் யோசனையின்படிதான் நடத்தப்படுகிறது நம்முடைய உரிமைகளைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதாகத் தெரியவில்லை! நான்காம் வகுப்பினருக்கு வைத்திய வசதியைப் பற்றி ஏற்கனவே பார்லிமெண்டில் அறிவிக்கப்பட்டாலும், அதை இதுவரை இன்னும்கூட அமுல் செய்யாமலிருக்கிறது. பிரிட்டிஷாரின் சட்டதிட்டங்கள் இன்றைய ஆட்சியிலும் அப்படியேத்தானிருக்கிறது. இந்த நிலையில் மாறுதலில்லாவிட்டால் தொழிலாளர்கள் சுதந்திரத்தின் உண்மையான மகிழ்ச்சியைப் பெற்றவர்களாக ஆக மாட்டார்கள். நாம் எதைச்செய்தாலும், சொன்னுலும் பழைய சட்டத்தின்படியே இவை யெல்லாம் அடிபட்டுப்போய் வருகிறது. எனவேதான் நிலைமையில் மாற்றம் வேண்டும் என்கிறேன் நான்.

நீங்கள் எல்லோரும் இந்த சங்கத்தில் அங்கத்தினர்களாக வேண்டும்.

போஸ்டல் சூப்ரெண்டுகளைப்பற்றி பல்வேறு பிராந்தகளிலிருந்து கேட்டிருக்கிறேன். ஆனுல் சூப்பிரண்டோ நான் பாரபட்சமற்றவன் என்கிருர், ஆனுலும் இதை

நம்புவதற்குமில்லை. அவர் எந்த சிப்பந்தியையும் போதிய காரணமில்லாமல், வெறும் இன்ஸ்பெக்டர் போஸ்ட் மாஸ்டர் ஆகியவர்களின் ரிபோர்ட்டை வைத்து'தண்டிப்பதோ மாற்றுவதோ கூடாது. அது ஒரு பட்சமுடையதாகத்தானிருக்கிறது. சூப்ரெண்ட் அவர்கள் மற்றொரு பக்கத்தையும், பிராதையும், விளக்கங்களையும், கூட கவனித்து பிரச்னையை முடிவு கட்டவேண்டும், தீர்ப்பளிக்க வேண்டும்.

ஒரு சிலர், சூப்ரெண்டுகளுடன் நட்புகொண்டு ஆபிஸ் விஷயங்களைப்பற்றி அவர்களுக்கு தவறான விளக்கங்களைச் சொல்லிவருகிறார்களென்று நமக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. இது மிகவும் மோசம் மட்டுமல்ல துரோகமும் நிரம்பியதாகும் இத்தகைய துரோகிகளின் விஷங்கலந்த பேச்சுக்களுக்கு சூப்ரெண்ட்டுகள் தயவு செய்து செவிசாய்க்கக் கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். முடிந்தால், தங்களின்கள் தேகம் தீர, மூன்று—நான் காம்—வகுப்புச்சிப்பந்திகளடங்கிய ஒரு கூட்டம் கூட்டி, இவர்களுக்குள்ள குறைபாடுகளுக்குச் சுமுகமாகப் பரிகாரம் தேடவேண்டும். அதை விடுத்து தாறு மாறாக நடக்கக்கூடாது. இங்கிலை, இன்று சூப்ரெண்ட்டுகளால் அளிக்கப்பட்டிருக்கும் வாக்குறுதிகளுக்கும் மாறாக மீண்டும் தொடருமேயானால் தேவையில்லாத விளைவுகளை அவர்களே தேடி அணைத்துக்கொள்ளுகிறார்கள் என்று என்னால் சொல்ல முடியும் என்று கூறி முடித்தார்.

---

# தோழர் திருச்சி P. ஜெகன்னாதம் அவர்களின் அறிவுரை!

கடந்த 12-6-55ல் பாண்டிச்சேரி மாநாட்டில் அவர் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு:

நாடு சுதந்திரமடைந்துவிட்டது தபால்காரர்களுக்கு அது இன்னும் கிடைக்கவில்லை. அவர்கள் உடையைப்பார்த்தாலே அது தெரியும். எல்லோருக்கும் ஓரே அளவான சட்டைகள், வேடிக்கையாக மட்டுமல்ல வேதனையாகவுமிருக்கிறது. இதை மாற்றி எல்லோருக்கும் தனித்தனியான அளவில் சட்டைகள் எடுத்துத்தர அரசாங்கம் முயலவேண்டும். இல்லையேல் டேல்லிக்கு இதே தொங்கும் சட்டைகளுடன்தான் போய் அதிகாரிகளுக்குக் காட்சி தரவேண்டி வரும். அவர்களுக்கு அப்போதாவது இந்தக்காட்சி ஒரு 'தனி காட்சி'யாக வாகிலும் விளங்கட்டும்.

ஏதாவது உயர்வு கேட்டால் இல்லை என்கிறார்கள். ரயில்வேயில் 50 சதம் வேலை ஒதுக்கப்படுகிறது சிப்பந்திகளின் பிள்ளைகளுக்கென்று. ஆனால் அது நமக்கு சுகம் இல்லை. நமக்கும் அதுபோல ஒதுக்கித் தரப்படவேண்டும்.

உயர்த்தப்பட்ட போஸ்ட்மென்கள் ஒரு வருஷ சர்வீஸிக்குப்பிறகு வேலையில் ஊர்ஜிதம் செய்யப்படவேண்டியது மிகவும் அவசியமாகும். ஒரு சிப்பந்திக்கு ஓய்வு பெறும் விதத்தை 55 லிருந்து 60 ஆக உயர்த்தப்படவேண்டும்.

தபால்காரர்கள் உழைப்பாளிகள் அவர்களுக்கு தொழிலுக்கேற்ப ஊதியம் அளிக்கப்படுவதில்லை. இந்தக் குறைகள் நீக்கப்பட்டேயாகவேண்டும்.

இதற்கு நீங்கள் எல்லாம் ஒன்றுபடவேண்டும். ஒன்றுபட்டு உங்கள் ஒத்துழைப்பை நமது பொதுச் செயலாளர் அவர்களுக்கு நல்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

## மலேயாவில் சம்பள விகிதங்கள்!

### மலேயா தபால் தொழிலாளர் செயலாளரின் கடிதம்!

போஸ்டல் அண்டு டெலி கம்யூனிகேஷன்ஸ்
யூனிபார்ம்ட் ஸ்டாப் யூனியன்.
யாக்ஸ்வெல் ரோட், போஸ்ட்மென் குவார்டர்ஸ்.
C/o. ஜெனரல் போஸ்டாபீஸ்
சிங்கப்பூர் 31-12-54.

To
சென்னை மாவட்ட பொதுச் செயலாளர்,
AIPU. சென்னை, இந்தியா.

ஐயா, உங்களுடைய கடிதம் சமீபத்தில்தான் கிடைத்தது. தாங்கள் கேட்டிருந்த தகவல்களை கீழேதருகின்றேன்.

**சம்பள விகிதங்கள்**

உதவி போஸ்ட்மேன்: 100×2—110 பைகள் சுமத்தல்.

போஸ்ட் மென்: 110/Bar/115×5—130×7.50—175

போஸ்ட்மென் ஸ்பெஷல் கிரேட்: 205×7.50—250 சார்ட்டிங்.

மெயில் ஆபிஸ்: 220×7.50 — 235/Bar/250×15 325.

மெயில் டிரைவர்: 120X4—128

இன்ஸ்பெக்டர் போஸ்ட்மென்: 355 (நிர்ணயிக்கப்பட்ட சம்பளம்)

ஒரு சிப்பந்தி அவர் ஓய்வு பெறும்போது, 3-ல் 2 பகுதியை, அவர் கடைசியாக வாங்கிய சம்பளத் தொகையை யொட்டி பென்ஷன் தொகையாகப் பெறுகிறார் அதோடு 35 சதம் பஞ்சப்படி அலவன்ஸும் அளிக்கப்படுகிறது. இதற்கு அவர் 35 வருஷம் சர்வீஸை பூர்த்தி செய்தவராக இருக்க வேண்டும்.

தங்கள் கடிதத்திற்கு உடனே பதில் எழுத முடியாமல் தடையேற்பட்டதற்கு வருந்துகிறேன்.

அன்புள்ள,
(Sd) P. கோவிந்தசாமி, செயலாளர்.

'ஹெரால்ட்' வளர்ச்சிக்கு : உதவி நாடகம்!

# 'வாழ்வில் ஒருநாள்...'

இயல், இசை, நாடக சபையாரால் கடந்த 19-6-55ல் சென்னை அண்ணாமலை மன்றத்தில், நமது ஹெரால்ட் வளர்ச்சி நிதிக்காக 'வாழ்வில் ஒருநாள்...' என்ற அருமையானதோர் சமூக நாடகமொன்று இன்ஸ்பெக்டர் ஜெனரல் கனம் வி. ஆர். ராஜரத்தினம், பி.ஏ., ஐ.பி. அவர்களின் தலைமையின்கீழ் நடித்துக் காட்டப்பட்டது. மன்ற முழுவதும் மக்கள் நிரம்பி வழிந்து நாடகத்தை ரசித்தது மட்டுமல்ல; ஹெரால்ட் நிதிக்காக ஒரு கணிசமான தொகையையும் அன்று தந்து பெருமைபடுத்தியது உள்ளபடியே மகிழ்வு தருவதாகவே இருந்தது.

நமது அன்பழைப்பிற்கு இணங்கி, பல வேலைகளிலிருந்தும் சிரமம்பாராமல் நாடகத்திற்கு வந்திருந்து தலைமை தாங்கி, நம்மையும் நமது உதவி நாடகத்தையும் சிறப்பித்து அருமையான 'அறிவுரையாற்றிய கனம் இன்ஸ்பெக்டர் ஜெனரல்வர்களுக்கு நாமும் நமது சங்கமும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். அன்று அவர் நமக்கு ஆற்றிய அறிவுரை, நம்மின் எதிர்காலத்திற்கு சிறந்ததொரு வழிகாட்டியாய் இருக்குமென்பது மட்டும் நிச்சயம்.

**கனம் ஐ. ஜி. அவர்களின் உரை**

"இந்நாடகத்தையும் இதில் நடித்தவர்களையும் நான் மனமார பாராட்டுகின்றேன்! எல்லோரும் நன்றாகவே நடித்துக் காட்டினார்கள்! இந்த நாடகம் 'போஸ்ட்மென் ஹெரால்ட்' என்ற பத்திரிகையின் வளர்ச்சிக்காக நிதி திரட்ட நடத்தப்படுகிறது என்று அரியும்போது எனக்கு ஒன்று சொல்லத் தோன்றுகிறது. இந்த நாடகத்தை இம்மாகாண முழுவதிலுமுள்ள முக்கிய நகர்களில் ஒரு நல்ல முயற்சியின் மூலம் நடித்துக் காட்டினால்—போதிய அளவுக்கு நிதி திரட்ட முடியுமென்று நான் நம்புகிறேன். பத்திரிகையை வளர்க்க இதன் மூலம் பணம் திரட்ட முடியும். இன்று நாடகத்தின் மூலம் கணிசமான தொகையை 'ஹெரால்ட்' வளர்ச்சிக்காக அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகை நல்ல முறையில் பயன்படுத்தப்பட்டு, தபால்காரர்களின் முன்னேற்றத்தை மேலும் மேலும் துரிதப்படுத்துமென்று நான் நம்புகிறேன். உங்களுக்கு என் நன்றி! வணக்கம்."

என்று மிக அழகாகவும்-அதேநேரத்தில், பயனும், கருத்துமுள்ளதாகவும் அவர் சொற்பொழிவாற்றினார்கள். அவருக்கு நமது இதயபூர்வமான நன்றி!

அவர் சொற்பொழிவாற்றிய பிறகு, அன்று நாடகத்தை ஏற்பாடு செய்து, வெற்றிகரமாக நடத்தித் தந்த நமது திருக்குறளாரவர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்து ஒரு சிற்றுரையொன்று—ஆனால் சிறப்புரை—ஆற்றினார்கள்!

ரூபாய் 821-ஐக் கொண்ட பணமுடிப்பொன்றை கனம் இன்ஸ்பெக்டர் ஜெனரலவர்களின் மூலம், நமது பொதுச்செயலாளர் பி. எம். கிருஷ்ணன் அவர்களிடம் கொடுத்துவிட்டு, அனைவருக்கும் அவர் நன்றி கூறி சிறப்பித்து முடித்தார்கள்.

இறுதியாக நமதருமைத் தலைவர் ராமானுஜமவர்கள், 'ஹெரால்ட்' மீண்டும் வருவதைப்பற்றி மகிழ்ச்சி தெரிவித்தும் இதுவரை நின்றிருந்ததைப் பற்றி தெரிவித்தும், இனி அது தொடர்ந்து வெளிவர அனைவரும் தங்களின் ஒத்துழைப்பை நல்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

இறுதியாக தேவதாஸ் புகழ் ராணியவர்களின் இன்னிசைக்கும், தேசிய கீதத்திற்கும் பிறகு, நாடகம் வெற்றிகரமாகவும் இனிதாகவும் முடிந்தது.

**நாடகத்தைப்பற்றி :**

'வாழ்வில் ஒருநாள்... என்ற இந்த அருமையான நாடகம் தோழர் எஸ். வி. ராஜகோபாலன் அவர்களின் சிருஷ்டி...! அவரின் பயிற்சியின்கீழ் இயல், இசை நாடக மன்றத்தாரளித்த தமிழோவியம் இது! நமமுடைய அன்பு நண்பர்களான சந்தானம், நம்மாழ்வார், ஜெகன்னாதம், சண்முகசுந்தரம் போன்ற தபால் தொழிலாளர்களும், பிரதம பங்கெடுத்துக்கொண்டு சிறப்பித்த இந்த நாடகம், இயல் இசை நாடக மன்றத்தின் நடிகர்களால் மேலும் புகழ்பெற்றதாகிவிட்டது!

இந்நாடகத்தின் கதையும் வசனமும் கச்சிதமாகவும் விறுவிறும்பாகவும் அமைந்தது மிகவும் பாராட்டற்குரியது. நடிகர் நடிகைகளின்—ஒற்றுமையால் நாடகம் சோபிதமும், சுவையும் கொண்டு ரசிக்கத் தக்க அளவில் அமைந்தது மகிழ்ச்சிக்குரியவாகும்! பின்னணிப்பாடல்கள் நன்றாகவும் இனிமையாகவும் அமைந்தது. 'கற்பு! நடனம் பிரமாதம்! பாராட்டற்குரியது! மேடை அமைப்பும்—குறிப்பாக ஆற்றுப் பெருக்கெடுத்தோடும் காட்சி—மிகவும் நுணுக்கமாகவும் பொருத்தமாகவும் அமைக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சியைத் தரக்கூடியதாக இருக்கிறது. கதையின் விறுவிறப்பும் நடிகர்களின் திறமையும் நாடகத்தை சிறப்பிக்கிறது. ஏதோ சிலபல இடங்களில் சில குறைபாடுகளிருந்தாலும், அவைகளெல்லாம் பொதுவான கோணங்களிலிருந்து பார்க்குமிடத்து, இருக்குமிடமே தெரியவில்லை! நடிகைகள் இன்னும் கொஞ்சம் துடிதுடிப்பாகவும், பாவக் குறிகளை நன்கு வெளிக்குக் காட்டியும், உற்சாகமாகவும் நடிக்க முயலவேண்டும். கதாநாயகனுக்கு இன்னும் கொஞ்சம் சந்தர்ப்பம் அளிக்கப்பட்

டிருக்கவேண்டும். அவருக்குத் 'தனிமையாய் பேசும் வசனங்கள்' சில பலவாவது அளிக்கப்பட்டிருந்தால் இன்னும் சோபிதமாக இருந்திருக்கும். ஆனால், இவையெல்லாம் சாதாரணக் குறைபாடுகள். வெகு எளிதில் நீக்கப்பட முடியும் என்று நம்புகிறோம் முதல் நாடகமாயிருந்தும் இவ்வளவு அபாரமாக் வெற்றியடைந்தது உள்ளபடியே பாராட்டற்குரிய தாகும்! நமது சங்கத்தின் சார்பாக இதனை நன்கு நடத்திக்காட்டிய நம்மவர்களுக்கும், நாடக மன்றத்திருக்கும் நமது இதயபூர்வமான நன்றி! [ப-ர்]

---

# என்று தணியுமிந்த சம்பளப் பிரச்னை?

நமது நாடு சுதந்திரம் பெற்று சில ஆண்டுகளில் உலகிலுள்ள ஏனைய நாடுகள் சமாதான நிலையிலிருக்க வழி கோலுவதிலும் நமது நாட்டின் உணவு, உடை பஞ்சத்தை ஒழித்துக்கட்டி பாட்டாளி மக்கள் புனித மான வாழ்வு நல்கவும் பலகோடி மக்களுக்கு வேலை கொடுத்து நமது நாடு பலவிதத்திலும் உயர்வு பெற்று, "பாருக்குள்ளே நல்லநாடு பாரதநாடு" என்று அருள்கவி பாரதியார் பாடலை மெய் பிக்க பலவிதமான திட்டங்கள் வகுத்து, பலவித சிக்கல் களையும் நிவர்த்தித்து சுய ஆட்சி நடத்திவரும் அரசியலாரை மனமாற வாழ்த்துகிறோம்.

மக்கள் உழைப்பின் மூலம் நாடு நலனுறும் என்று நமது நாட்டின் அரசியல் தந்தை நேருஜி அவர்க ளுடைய பொன்மொழிகள் இயங்கவேண்டி, வர்த்தக ஊழியர்கள், பலவித ஆலை, சங்கத் தொழிலாளர்கள் மற்றும் பலவிதத் தொழிலாளர்களுக்கெல்லாம் வேலை நிர்ணயம், காலம், அளவு, தகுந்த சம்பளம், சன்மானம், சகாய நிதி, சேமிப்பு நிதி இன்னும் சில சலுகைகளுக்கு சட்ட திட்டங்கள் வகுத்து தொழி லாளர்களுடைய சுகவாழ்விற்கு இடமளித்து, மக்கள் விருப்பப்படி சுய ஆட்சி நடைபெறுவது கண்டு புள காங்கிதமடைந்துள்ளோம்.

இந்நிலையில்—தபால்காரர்கள், 4-ம் பிரிவு ஊழி யர்கள், E. D. ஊழியர்கள்—உழைப்பிற்கும் பொறுப் பிற்கும் பாருளாதார நிலைக்கும் தகுந்தபடி சம்பளம் இதர சலுகைகள் வழங்கி, ஏனைய ஊழியர்களைப் போல் நமது சமுதாயத் தோழர்கள் நல்வாழ்வு அடையும் நாள் என்நாளோ?—

ஏனைய தொழிலாளர்களுக்கு நிர்ணயம் செய் துள்ள வேலைநேரம் அளவு முதலிய சட்ட திட்டங் கள் தபால்காரர்களுக்கும் வகுத்துக்கொடுத்து நலம் பெறச் செய்யும் காலம் எப்போது?—

மே தின விழாவின் நன்நாளில் உலகம் போற் றும் உத்தமர்—நமது பிரதமர் நேருஜி உள்ளமிருந்து மொழிந்த குறைந்தபட்ச மாதச் சம்பளம் ரூ. 100 பெறும் காலம் எக்காலம்?—

தபாற்காரர்களையும் 4-ம் பிரிவு ஊழியர்களையும் ஒழித்துக்கட்டி E. D. ஊழியர்களை நியமனம் செய்துகொண்டுவரும் பேராபத்து நீங்குவது என் றைக்கு?—

தபால்காரர்களுக்கும் 4-ம் பிரிவு ஊழியர்களுக் கும் வழங்கும் சம்பளத் திட்டங்களின் புள்ளி விவரங் களைக் கீழே காண்க.

அந்நிய ஆட்சியில்

1921-ல் குமாஸ்தாக்களுக்கு
ரூ. 35-135 — 40-140.

1928-ல் தபால்காரர்களுக்கு
ரூ. 18- 38 — 20- 40.

குடியரசில்:

1947-ல் குமாஸ்தாக்களுக்கு ரூ. 60—170.
தபாற்காரர்களுக்கு ரூ 35— 50.

அந்நிய ஆட்சியில் தபால்காரர்களுக்கும் குமாஸ் தாக்களுக்கும் சம்பள வித்தியாசம்:

ஆரம்பச் சம்பளத்தில் ரூ 20.
உயர்ந்த சம்பளத்தில் ரூ. 100.

குடியரசில் வித்தியாசம்

ஆரம்பச் சம்பளத்தில் ரூ. 25.
உயர்ந்த சம்பளத்தில் ரூ. 120.

ஆகவே நமது தேசத்தின் தந்தை மகாத்மா காந்தி அடிகளின் லட்சியப் பாதையில் சீரிய முறையில் நிர்வாகம் நடத்தும் அரசியலார் உடனடியாக தபாற் காரர்கள் 4-ம் பிரிவு ஊழியர்கள், E. D ஊழியர் கள் இவர்களுடைய சம்பளத் திட்டங்களை மாற்றி அமைத்து நமது சமுதாயத் தோழர்கள் தகுந்த முறையில் வாழ்வு நடத்த ஆவன செய்யும் என்று இறைஞ்சி நிற்கின்றார்கள்!

* * *

## நெல்லையில் அல்லல்கள் பல

ஆள் குறைப்பிற்குப் பிறப்பிடம் தூத்துக்குடி சப் டிவிஷனாக விளங்குகிறது. இரண்டொரு காலத் திற்குள் (1) ஓட்டப்பிடாரம், (2) பசுவந்தனை, (3) இளவேலங்கால், (4) புதூர்—இந்த நான்கு கிளைத் தபால் நிலையங்களிலுள்ள தபால்காரர்க ளுடைய ஸ்தானங்களை எடுத்துவிட்டு E. D. ஊழி யர்கள் நியமனம் செய்யப்பட்டிருக்கிறது.

Thrownout 4ம்பிரிவு ஊழியர்களை இதர யூனிட் டின் தலைவர்களின் விருப்பம் கேளாமல் உத்தரவு போட்டு நுழைத்து இருக்கிறது. Thrown out தபால்காரர்களைமட்டும் மனம்போன போக்கில் சிலர்

தூத்துக்குடி சப் டிவிஷனிலும் சிலர் இதர யூனிட்டு களின் தலைவர்கள் விருப்பங் கேளாமல் உத்தரவு போட்டு நுழைத்திருக்கின்றார்கள். மற்றுமுள்ள தபால்காரர்கள் அடுத்த யூனிட்டுக்கு மாற்றியதை, இதர யூனிட்டுக்கு மாற்றும்படி விண்ணப்பித்தவுடன் விரும்பிய யூனிட்டுக்கு நுழைவு கொடுக்க மறுக்கிறார்கள். பாகுபாடான உத்தரவுகள் போட்டு, தோழர்களை அல்லல்படுத்தும் தொண்டும் தூத்துக்குடி சப் டிவிஷனிலேயே நடைபெறுகிறது.

அதிகாரிகள் செய்துள்ள தபால்காரர்கள் மாற்றுதல் திட்டத்தினாலும் இதர யூனிட்டில் ஆள்குறைப்பு நிவர்த்தியாகவில்லை. இலாகாவிற்கு பணச் செலவு மட்டுமல்லாமல் ஊழியர்களும் பலவித தொல்லைகளுக்குள்ளாகிறார்கள்.

தென்காசி சப் டிவிஷன் கிடேஷன் லிஸ்டு தயாரிப்பு மிகவும் விசித்திரமாக இருக்கிறது. ஒருவருக்கு ஒருவிதமான ஸ்தானம் மற்றவருக்கு வேறு விதமான ஸ்தானம் பதிவுகளிலிருக்கிறது. எந்த டிவிஷனிலும் நடைபெறாத பழக்கவழக்கங்களும் இலாகாவின் சட்டதிட்டங்களுக்கும் பறம்பாகவும் இருக்கிறது லிஸ்டு தயாரிப்பு!

தொல்லைகள் பலவும் மாவட்ட அதிகாரி ஸ்ரீ M. R. கோபாலன் அவர்களிடம் 17.9.55ல் பேட்டியின் சமயம் விளக்கியும் உத்தரவுகள் பாகுபாடாக உள்ளதை ரிக்கார்டு பூர்வமாக எடுத்துக் காட்டப்பட்டும் உள்ளது.

அல்லல்கள் பலவும் இலாகாவின் விதிப்படிக்கும் சமதாமக் கொள்கைப்படிக்கும் நியாயம் வழங்குவார்களென எதிர்பார்க்கப்படுகிறது.

நெல்லை, 17-9-55. } S. சண்முகசுந்தரம், மாவட்டச் செயலாளர்.

---

# அகில இந்திய தபால் தொழிலாளர்கள் யூனியன்

(தபால்காரர் & IV-வது வகுப்பு சிப்பந்திகள் உள்ளிட்ட)

## சர்குலர்

ஆகஸ்டு 15ந்தேதியிலிருந்து நமது போஸ்ட்மென் ஹெரால்ட் மீண்டும் தொடர்ந்து வெளிவந்து, நம்மவருக்கு வழக்கம்போல சேவை செய்ய இருக்கிறது. நம்மவர்கள் அனைவரும், அதாவது தபால்காரர் மட்டுமல்லாமல்; நான்காம் வகுப்பு சிப்பந்திகள் உள்பட அனைவரும், வாங்கிப்படிக்கவும், தொடர்ந்து ஒரு சந்தாதாரராக இருந்து வரவும் என்ற அளவில், ஹெரால்ட்டின் விலை 4 அணாவிலிருந்து இரண்டு ஆகவாகச் செய்யப்பட்டிருக்கிறது. எனவே எல்லா நண்பர்களும், புதியதாக சந்தாதாரராகச் சேர்ந்து, நம்மவரின் ஒரே இணைப்புச் சங்கிலியான இந்தப் பத்திரிகையை தொடர்ந்து வெளியிட ஆவன செய்வீர்களென்று நம்புகிறேன். இந்த நேரத்திலே ஆங்காங்குள்ள கிளைச்சங்கத்தின் செயலாளர்களும் முக்கியஸ்தர்களும் பெரிதும் ஆர்வமாக முன்வந்து இந்த முயற்சி வெற்றிபெற தங்கள் ஒத்துழைப்பை நல்குவதுடன், தங்களுக்கு எவ்வளவு பிரதிகள் வேண்டுமென்று முன்னதாகவே அறிவிக்கக் கோரப்படுகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும், தங்களின் கிளையில் அங்கத்தினர்களாக இருக்கும் ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு பிரதி கிடைக்கும்படிக்கும், அதற்கான வகையில், நிலைமையை அவர்களிடம், விளக்கிச்சொல்ல அனைவருமே ஒவ்வொரு பிரதி வாங்கிப்படித்துப்பயன் பெறும்படி செய்யவும் கோரப்படுகிறார்கள்.

மேலும் அங்கத்தினர்களும், நேரடியாகவே தங்கள் தங்கள் ஆண்டுச் சந்தாத்தொகையை யூனியனுக்கும் அனுப்பிக் கொடுக்கவும் பிரதிகளைப் பெற்றுக் கொள்ளவும் தகுந்த ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கிறது எனவே அப்படி அனுப்புகின்ற தோழர்கள் ரூ. 1-8-0 யை ஆண்டு சந்தாத் தொகையாக அனுப்பித்தர கோரப்படுகிறார்கள்.

அதோடு அங்கத்தின நண்பர்களுக்கும் ஒரு வார்த்தை. ஹெரால்ட் விலை இரண்டணாவாக ஆக்கப்பட்டிருப்பதை முன்னிட்டு அதிகமான நஷ்டத்திற்குள்ளாக வேண்டி நேரிட்டிருப்பதால், சென்ற ஆண்டு சந்தாதாரர்களாகவிருந்து இடையிலே, கடைசி இரண்டு மாதங்களுக்குப் பத்திரிகை நிறுத்தப்பட்டதால் மீதமுள்ள பாக்கி சந்தாத்தொகையை திருப்பி வாபஸ் அனுப்புவதற்கில்லை இந்த சிறு அசௌகரியத்தைப் பொருட்படுத்தாது அனைவரும், முன்னைவிட, அதிகமான அளவில், புதிய அங்கத்தினராகச் சேர்ந்து, நமது பத்திரிகை இனியும் தொடர்ந்து எந்த ஓர் தடங்கலுமின்றி வெளிவர ஒத்துழைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

நன்றி: வணக்கம்.

நெ. 7, பவழக்காரத் தெரு சென்னை 1. 15-8-55 } அன்புள்ள V. சந்தானம் மானேஜர்.

# பாராளுமன்றத்தில் ஸ்ரீ வி..வீராசாமி பி. ஏ., யவர்களின் முழக்கம்!!

## தபால்காரர்களின் குறை நீக்க தீவிர விவாதம்!

கடந்த 29-3-55 பார்லிமெண்டின் பட்ஜெட் கூட்டத்தில், நமது அன்பிற்குரிய, திரு. வி. வீராசாமி B. A., அவர்கள், நம்மவர்களின் குறைகளைப் பற்றிய ஆற்றிய சொற்பொழிவின் விவரங்கள் கீழே தரப்படுகின்றன.

"நாட்டின் தபால் தந்தி இலாகாவில், மக்களுக்கான தபால் போக்கு வரத்து வசதிகள் நல்ல அளவுக்கு சமீப காலத்தில் வளர்ச்சியடைந்து வந்திருப்பது, உண்மையிலேயே மிகவும் பெருமைப்படக்கூடிய விஷயமாகும்! இவ்வளவு நல்ல அளவுக்குப் பாராட்டக்கூடிய அளவில், தபால் வசதிகளை அனைவருக்கும் கிடைக்கும்படிக்கு செய்தமைக்காக, கனம் போக்கு வரத்து மந்திரியாரையும் அவரது துணை அமைச்சரையும் நான் பாராட்டுகிறேன். எனது மகிழ்ச்சியையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆனால் நானிப்படி பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்வதால் ஒரு கிராமத்திற்கு ஒரு போஸ்டாபீஸ் வீதம் திறவப்பட்டிருக்கிறது என்பது அர்த்தமல்ல. நான் சொல்ல விரும்புவதெல்லாம், நம்முடைய கனம் மந்திரியாரவர்கள், அவர் முன்னாலே, சில போற்றத்தக்க பெரிய நோக்கங்களை வைத்திருக்கிறார்; அதாவது, ஒவ்வொரு ஆயிர மக்களுக்கும் ஒரு போஸ்டாபீஸ் ஏற்படுத்தவேண்டுமென்று அவர் நோக்கங்கொண்டிருக்கிறார் என்பதுதான்.

தபால் தந்தி இலாகாவென்பது நாடு முழுமையும் பரவிக்கிடக்கும் ஒரு பெரிய நிர்வாகமாகும்! நாட்டின் ஒவ்வொரு கிராமத்திற்கும் கிராமத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும், தபால்காரர் சென்று கடிதங்களையும், மணியார்டர்களையும் விநியோகித்துவிட்டு வருகிறார்.

இவ்வளவு சாதனங்கள், நாட்டு மக்களுக்கு தபால் இலாகாவின் மூலம் அளிக்கப்பட்டிருக்கிறது என்று நான் கூறுகிற இதே நேரத்திலே, அந்த இலாகாவில் பணியாற்றுவோரின், நிலையும், வாழ்வும் அதற்குத் தகுந்த விகிதாச்சாரப்படி உயர்ந்திருக்கிறது என்றோ உயர்த்தப்பட்டிருக்கிறது என்றோ நான் சொல்ல வரவில்லை. மிகக் குறைவான ஊழியம் தரப்படும் அந்தப் பிரிவின் சிப்பந்திகளின் வாழ்வும் நலனும் மிகவும் பாதிக்கப்பட்டுக் கிடப்பதைத்தான் இன்று நம்மாலே பார்க்க முடிகிறது. எனவேதான், இப்படி மிகவும் பாதிக்கப்பட்டு, வேதனைக் குள்ளாகிக் கொண்டே, கடமையை மட்டும் தவறாமல் செய்து கொண்டு வரும், அந்த அருமையான ஏழைச் சிப்பந்திகளிடத்திலே, சிறிதளவு கருணையும், அன்பும் காட்டும்படி, இந்த தபால் இலாகாவின் அமைச்சரவர்களையும் மற்றுமுள்ள உயர்தர அதிகாரிகளையும், மிகவும் பணிவன்பாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். சோஷியலிச சமுதாய அமைப்பு முறைபற்றியெல்லாம், மிக உயர்ந்த அளவில் பேசப்படுகின்ற இந்த நேரத்திலே, இந்த உழைப்பாளிகளின்பால் கொஞ்சம் பரிவு உள்ளங்கொண்டு நடந்துகொள்ள வேண்டிக் கொள்ளுகிறேன். இவர்களின் நேரத்தில் ஒரு நல்ல பகுதியை இதற்காக ஒதுக்கி வைக்கவேண்டுமென்றும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

### சம்பள விகிதங்கள்

அவர்களுக்குத் தரப்படும் சம்பளங்களின் விகிதங்களைநாம் சற்று அலசிப் பார்த்தோமானால், உள்ளபடியே வெட்கத்தால்தான் தலை குனியவேண்டும். குடியரசு நாடு என்றும், சோஷியலிஷ சமுதாயப் பெரும் சிலப்பரப்பு என்னும் இவ்விந்தியாவைச் சொல்லிக்கொண்டு தபால் இலாகாவின் நான்காம் வகுப்புச் சிப்பந்திகளுக்கும், தபால்காரர்களுக்கும் இவ்வளவு குறைவான அளவில் சம்பளம் கொடுக்க அரசாங்கம், அதுவும் ஓர் குடியரசை நிருவிருக்கும் அரசாங்கம், முயலுவது மிகவும் வெட்ககரமானது தான். பேரன்பு கொண்டவர்களே! ஒரு தபால்காரரின் ஆரம்பச் சம்பளம் எவ்வளவு தெரியுமா? ரூ. 35-தான்! அது 50 ரூபாய் வரையில்தான் போகும்! அதற்கு மேலே போகாது! ஒரு தபால்காரரின் சம்பள உயர்வு எவ்வளவு தெரியுமா? வருஷத்திற்கு 1 ரூபாய்! போதுமா? ஒரு நான்காம் வகுப்பு சிப்பந்தியாயிருந்தால், அப்போது அவருக்குக் கிடைப்பது எவ்வளவு தெரியுமா? ரூ. 30 தான். இதுதான் அவரின் ஆரம்பச் சம்பளம்! அதோடு அவர்களுக்கு வருடாந்திர சம்பள உயர்வு எவ்வளவு தெரியுமா? வெறும் எட்டணாதான்! அவர்களின் சம்பளத்தின் அதிகபட்சம் எவ்வளவு தெரியுமா? ரூ. 35 தான்! இதற்குமேல் அது போகாது! நிற்காது!! வேண்டுமானால் இங்கேயே உட்கார்ந்துகொள்ளும்!!!

[இடையில்]

ஸ்ரீ ராஜ்பகதூர்:—கனம் அங்கத்தினரவர்களுக்கு ஒரு தபால்காரர் மற்றெல்லா ஊதியங்களையும் சேர்த்து மொத்தமாக எவ்வளவு தொகை பெறுகிறார்

என்பதை அறிவாரா? அதையும் கணக்கில் சேர்த்துச் சொல்வாரா?

ஸ்ரீ நம்பியார்:—தோழர் வீராசாமியவர்கள் பேசுவது அடிப்படைச் சம்பளத்தைப்பற்றித்தான்.

ஸ்ரீ ராஜபகதூர்:—நான் பேசுவது அவர் பெறும் மொத்த ஊதியத்தையும் சேர்த்துத்தான்!

## பென்ஷன்

ஸ்ரீ வீராசாமி:—இதுதான் அவர்களின் வழக்கமான சம்பள விகிதங்கள். அதோடு அவர்கள் ஓய்வு (பென்ஷன்) பெறும்போது அவர்களுக்குக் கிடைக்கக்கூடியது நான்காம் வகுப்புச் சிப்பந்திக்கு 11-8-0 ரூபாயும் தபால்காரருக்கு 16-8-0 ரூபாயும்தான்! இந்த 11-8-0 ரூபாயிலும் 16-8-0 ரூபாயிலும் எப்படித்தான் ஒரு மனிதனும் அவனுடைய பெருத்த குடும்பமும் வாழ முடியுமென்பது எனக்குப் புரியவில்லை! எனவேதான் நான் இந்த புதிய—ஆனால் மிகவும் நேர்மையின்பாற்பட்ட சம்பள விகிதங்களை அரசியலாருக்கு சிபாரிசு செய்ய விழைகின்றேன். ஒரு நான்காம் வகுப்புச் சிப்பந்திக்கு ரூ. 40—1—85 என்ற விகிதாசாரப்படியும்—ஒரு தபால்காரருக்கு, 50—2—100 என்ற விகிதாசாரப்படியும் சம்பளம் தரப்பட்டால், அவர்கள் வாழ்க்கைத்தரம் தாங்கக்கூடிய அளவுக்கு மாறுமென்பதுமட்டுமல்ல; அவர்கள் ஓய்வு பெறும்போதும், நான்காம் வகுப்புச் சிப்பந்தி ரூ. 42-8-0யையும் ஒரு தபால்காரர் ரூ. 50யும் பென்ஷனாகவும் பெறமுடியும். இதனால் அவர்களின் பாரம் இறுதிக்காலத்தில் கொஞ்சம் குறையவாவது செய்யும்—கவலையற்றுவது சாவார்கள்! இதையும் நாம் செய்ய முற்படாவிட்டால், நாம் அடிக்கடி பேசும் 'சோஷியலிச மாதிரி' முறை வெற்றி பெறுமா?—பெற முடியுமா வென்று நான் அஞ்சுகின்றேன்!

ஸ்ரீ நம்பியார்:—அது (சோஷியலிச மாதிரி அமைப்பு) வெறும் பிரச்சாரத்திற்காக மட்டும்தான்!

## 50% காலி வேலைகள்

ஸ்ரீ வீராசாமி:—1947க்கு முன்னால், சிப்பந்திகளுக்குப் பிரமோஷன் அளிப்பதென்பது சிறியதும் மிகச் சாதாரணமானதுமான பரீட்சைகளின் மூலம் அளிக்கப்பட்டு வந்தது. இதுவும் நான்காம் வகுப்பிலிருந்து தபால்காரராக ஆக்கப்படுவதற்குக் கையாளப்பட்ட முறையாகும்! அதற்குப் பிறகு பரீட்சையென்பது மிகவும் கடினமானதாக ஆக்கப்பட்டது. ஆனால் இன்றோ அவர்கள் ஆங்கிலத்திலேயே பதில்கள் எழுதும்படிக்குக் கேட்கப்படுகிறார்கள்! P. & T. விஷயங்களைப்பற்றி கட்டுரைகள் தீட்டும்படிக்குக் கேட்கப்படுகிறார்கள்! உங்களுக்குத் தெரிந்தவரையில், இந்த இலாகாவின் நான்காம் வகுப்புச் சிப்பந்திகளையும் தபால்காரர்களையும் அந்த அளவுக்கே ஆங்கிலம் கற்றவர்களாக எதிர்பார்க்க முடியாதுதான்! எனவேதான் நான் கேட்க விரும்புவதெல்லாம் அந்த P. & T. கைடை (Guide) நீங்கள் அந்த வட்டார மொழிகளிலே மொழிபெயர்த்துக் கொடுங்கள் பிறகு பாருங்கள் என்ன நடக்கிறது என்று! அதிலும் எங்கள் தமிழ்நாட்டில் தமிழ்மொழியில் மொழிபெயர்த்துக் கொடுங்கள்—பிறகு பாருங்கள், அந்த வெற்றியை!

ஸ்ரீ ராஜபகதூர்:—கனம் அங்கத்தினரவர்கள். தபால்காரர்களுடைய வேலை உயர்வை பற்றித்தான் சொல்லுகிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

ஸ்ரீ வீராசாமி:—ஆமம்! அதை பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறேன். தபால்காரர்களுடையவும் நான்காம் வகுப்புச் சிப்பந்திகளுடையவும் வேலை உயர்வுகளைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறேன்.

ராஜபகதூர்:—அப்படியானால் நாம் அப்படி எதிர்பார்த்தால்...!

ஸ்ரீ நம்பியார்:—ஏன் நாம் மற்றொரு தாப்பு வாதத்தையும்தான் கேட்கிறோமே!

ஸ்ரீ வீராசாமி:—எனவே நாம் சொல்லும் முறையில் தபால் தந்தி இலாகாவின் 'கைடுகள்' எல்லாம் தமிழிலும் மற்றுமுள்ள மாவட்ட மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டால், பரீட்சையில் தபால்காரர்களும் நான்காம் வகுப்புச் சிப்பந்திகளும் வெற்றி பெறுவது மட்டுமல்ல, சில வேலைகளில கிளார்க்குகளையேகூட தோற்கடித்துவரும் அளவிலும் அவர்கள் திறமை கொண்டவர்களாகவும் அவர்களிலிருக்க முடியும். இருக்க, அடுத்த பிரச்னைக்கு வருவோம்.

## ஸ்டாம்பு வெண்டர்கள்

தற்போது தபாலாபீசுகளிலுள்ள ஸ்டாம்பு விற்பனையாளர்கள் பென்ஷனில்லாத அரசாங்க சிப்பந்திகளாவார்கள். அவர்களும் மற்றைய போஸ்டல் கிளார்க்குகளைப்போல 8 மணி நேரம் வேலை செய்பவர்கள்தான். எனவே அவர்களை அரசாங்கம் பென்ஷனில்லாதார் பட்டியலில் சேர்த்து இன்னமும் துயரப்படும்படி வைத்திருப்பது அரசாங்கத்திற்கு அழகல்ல. அவர்கள் விஷயத்தில் ஆவன செய்ய வேண்டுகின்றேன்

## ஊர்ஜிதத் தேர்வு

கிளார்க்குகளாக உயர்த்தப்பட்ட தபால்காரர்களை வேலையில் ஊர்ஜிதப்படுத்த வைக்கப்படும் தேர்வு பற்றி நினைக்கும்போது பல சிப்பந்திகள் அரசாங்கத்தின் கேள்வித் தாள்களுக்கு சரியான முறையில் விடையிறுக்க முடியாமல், பரீட்சையில் தேறுவதே கடினமாக இருக்கிறது. அதனால் அவர்களுக்கு வேலையுயர்வு மறுக்கப்படுகிறது கடினமான பரீட்சைகள்—எனவே வெற்றி கிடைப்பதல்லை. அதி

லும் அவர்கள் 45வது வயதிலும் 60 வயதிலும் 5, 6 பெரிய பெரிய வால்யூம்களைப் படித்து பரீட்சை எழுதி வெற்றிபெறுவார் என்றால் அது எப்படி சாத்தியமாகுமென்று கேட்கிறேன். இவ்வளவு பெரிய படிப்புச் சுமைகளைத் தாங்கி, அவர்களால் எப்படி வெற்றிபெற முடியுமென்று கேட்கிறேன்! இது எதிர்பார்க்கக்கூடியதா என்று எண்ணிப்பார்க்க வேண்டுகின்றேன். இனி அடுத்து :

### அவுட்ஸ்டேஷன் அலவன்ஸ்

அவுட்ஸ்டேஷன் அலவன்ஸ் வழங்குவதைப்பற்றி கொஞ்சம். ஒரு தபால்காரருக்கு அவர் எத்தனை நாள் கிராமத்தில் சுற்றுப் பிரயாணத்திலிருக்கிறாரோ அத்தனை நாளைக்குப் பரிகாரமாக அவுட்ஸ்டேஷன் அலவன்ஸுகள் வழங்கப்படுகின்றன. இந்த அலவன்ஸின் விகிதமானது மாதத்திற்கு ரூ. 3-தான்! ஆம்—மூன்றேதான். இதற்கு முந்தியெல்லாம் (அதாவது சமீப காலம் வரையில்) அவருக்குக் கிடைத்து வந்ததெல்லாம் ரூ. 1-8-0தான். இப்போதுதான் அதுவும் நாம் எடுத்துக் காட்டியபிறகு தான் இந்த 3 ரூபாயும் அளிக்கப்படுகிறது. இந்த 3 ரூபாய் எப்படிப் போதும் என்று எண்ணிப் பாருங்கள். பாதைகள் கரடுமுரடாகவும், எந்த வசதியும் அற்றதாகவும் இருக்கும் கிராமங்களில் போவதற்கும் அங்கே அலைந்து திரிவதற்கும் வெறும் 3 ரூபாய்களை அலவன்ஸாகக் கொடுத்தால், அந்த சிப்பந்திக்கு அது எப்படிப் போதுமானதாகுமென்று கேட்கிறேன். எனவேதான் நான் வேண்டிக்கொள்வதெல்லாம்—இப்படிக் கஷ்டப்படும் அந்த சிப்பந்திகளின்பால் இரக்கங்கொண்டு ஒருநாளைக்கு குறைந்தது 8 அணுவாகிலும் அலவன்ஸ் போட்டுத்தர ஏற்பாடு செய்ய வேண்டுகின்றேன், இதைத் தவிர நான் விடுமுறை நாட்களைப்பற்றி சிறிது சொல்ல ஆசைப்படுகிறேன்.

### விடுமுறை நாட்கள்—அலவன்ஸ்

தந்தி-தபால்-சிப்பந்திகள் தபால் விடுமுறை நாட்களிலும வேலை செய்கிறார்கள். ஆனல் அவர்கள் அப்படி வேலைசெய்யும் நாட்களுக்கு எந்த அலவன்ஸையும் இலாகா பிரத்தியேகமாக அளிப்பதில்லை. வேலைமட்டும் வாங்கிக்கொள்கிறது. எனவே அவர்கள் வேலை செய்யும் விடுமுறை நாட்களுக்கும் அவர்களுக்கு தனிப்பட்ட அலவன்ஸ் போட்டுத்தருமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன்!

கனம் ராஜ்பகதூர்:—அப்படியானல் அவர்களுக்கு அளிக்கப்படும ஓவர்டைம் அலவன்ஸுகள் எதைக் குறிக்கும்?

ஸ்ரீ வீராசாமி;—தபால் தந்தி இலாகாவின் சிப்பந்திகள் தபால் விடுமுறை நாட்களிலும் வேலை செய்கிறார்கள்—அவர்கள் அப்படி வேலை செய்யும்போது அவர்களுக்கு ஓவர்டைம் அலவன்ஸாகிலும் அல்லது இத்தகைய நாட்களுக்கென விடுமுறை அலவன்ஸாகிலும் போட்டுத் தரப்படவேண்டும்.

ஸ்ரீ நம்பியார்:—அதாவது நஷ்டஈட்டு அலவன்ஸ்...!

கனம் ராஜ்பகதூர்:—நஷ்டஈட்டு அலவன்ஸ் என்பது அதற்காக அளிக்கப்படுவது அல்ல.

ஸ்ரீ வீராசாமி:—பிரிட்டிஷ்காரர்களிருந்தபோது விடுமுறை நாட்களில் சிப்பந்திகள் வேலை செய்தால் அதற்கென தனிப்பட்ட நஷ்டஈட்டு அலவன்ஸ் ஒன்று அளிக்கப்பட்டு வந்தது. அதைப்போலத் தான் அவர்களுக்கு இப்போதும் அளிக்கப்படவேண்டும் என்கிறேன். இதைத்தவிர யூனிபாரங்கள் விஷயங்களைப்பற்றி நான் சிறிது சொல்ல ஆசைப்படுகின்றேன்.

### யூனிபாரங்கள்

தபால்காரர்களுக்கு யூனிபாரம் சப்ளை செய்யப்படுவதைப்பற்றி நான் குறிப்பிடும்போது முதலில் தலைப்பாகைப் பிரச்னைதான் முன் வருகிறது. இது விஷயத்தில் நான் கனம் மந்திரியாரவர்களைக் கேட்டுக்கொள்வதெல்லாம், தபால்காரர்களுக்கு அவர்களின் துணி சப்ளையுடன் இரண்டு அல்லது மூன்று கெஜம் காக்கி மல் துணிகளையாவது வழங்கும்படி மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகின்றேன்—அது அவர்களின் தலைகளை இக்கொடிய உஷ்ணத்திலிருந்து ஓரளவாவது காப்பாற்றக்கூடுமென்று கருதுகிறேன். இங்கே—வடக்கே—சிப்பந்திகளுக்கு உல்லன் (கம்பளியாலான) துணிகளையே யூனிபாரங்களாக வழங்குகிறார்கள். ஆனல் தென்னட்டிற்கு இத்தகைய விலையுயர்ந்த துணி வகைகளையே வழங்க வேண்டுமென்றுங்கூட நாங்கள் கேட்கவில்லை! காரணம் எங்கள் நாடு உஷ்ணப் பிரதேசம். எனவேதான் 2 அல்லது 3 கெஜ காக்கி மல் துணிகளையாவது சிப்பந்திகளுக்கு அவர்கள் கொடிய உஷ்ணத்தினின்றும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைக் கூறும்போது மற்றொரு விஷயத்தையும் நான் குறிப்பிட விரும்புகிறேன். அதுதான் குடை விஷயம்!

### குடைகள் வழங்குவதுபற்றி

இங்குள்ள தபால்காரர்களுக்கு குடை என்பதே தரப்படுவது கிடையாது. ஒவ்வொரு தபால்காரர்களுக்கும் அவர்கள் வெய்யலிலும், மழையிலும் போய் வருவதற்கேற்ப ஆளுக்கொரு குடை வீதம் வழங்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மதுரையில் 10 தபால்காரர்களுக்கு ஒரு குடை வீதம் வழங்கப்படுவதைப்பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். இந்த ஒரு குடையை 10 தபால்காரர்களுக்கு ஏககாலத்தில் எப்படி வழங்குகிறார்கள்—வழங்க முடியுமென்றும் எனக்குப் புரியவே இல்லை. கஷ்டப்படுபவர்களுக்கு அதுவும் இலாகா

வின் மதிப்பும் உயர்வுமுள்ள சிப்பந்திகளுக்கு ஆளுக்கொரு குடை வீதம் வழங்குவதால் என்ன அபரிமிதமான செலவுதான் அரசாங்கத்திற்கு ஆகிவிடுமென்பது நமக்குப் புரியவே இல்லை ! நம்மைப் பொறுத்த மட்டில் வேலைக்குத்தான் அதிக மதிப்புத் தருகிறோம். நமது மதிப்பிற்குரிய இந்தியப் பிரதமர் நேரு அவர்கள், வேலை செய்யவேண்டும்—வேலையொன்றுதான் மற்றவரிடத்தில் நமக்கு நல்லதொரு மதிப்பைத் தேடித்தரும்! என்று குறிப்பிடுகிறார். அதுமட்டுமல்ல ; பிரதமர் நேரு முதல் சாதாரண காங்கிரஸ்காரர் வரையில் வேலைக்கு நல்ல மதிப்புத் தரவேண்டும் என்றுதான் பேசுகிறார்கள்...! இது தான் வேலைத்திறனுக்கு மதிப்புக்கொடுக்கும் மாதிரியாவென்று கேட்கிறேன் ?

## வைத்திய வசதிகள்

நிற்க. சிப்பந்திகளுக்கு அளிக்கப்படும் வைத்திய வசதிகளைப்பற்றி கொஞ்சம் பார்ப்போம். வைத்திய வசதிகள் அளிக்கப்பட வேண்டுமென்ற பிரச்னையை யொட்டி, ஒவ்வொரு சிப்பந்திக்கும் அவரின் குடும்பத்தினருக்கும் வைத்திய வசதிகள் வழங்கப்பட வேண்டுமென்று அரசாங்க இலாகாவிற்கு யோசனை கூறியிருக்கிறது. அதோடு இதுவிஷயமாக உத்திரவொன்றையும் அரசாங்கம் பிறப்பித்திருக்கிறது.

ராஜ்பகதூர்:—இது நான்காம் வகுப்பு சிப்பந்திகளின் குடும்பங்களுக்குங்கூட சேர்த்தா ?

ஸ்ரீ வீராசாமி:—ஆமாம். ஆனல் இப்போது இந்த வைத்திய வசதியானது நான்காம் வகுப்புச் சிப்பந்திகளைப் பொறுத்தவரை வாபஸ் வாங்கப்பட்டிருக்கிறது !

கனம் ஜெகஜீவன்ராம்:—இல்லை — அவைகள் வாபஸ் வாங்கப்படவில்லை—விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது—என் நண்பரே !

ஸ்ரீ வீராசாமி:— அப்படியானல் மிகவும் நன்றி.

ஸ்ரீ நம்பியார்:—இன்னும் ஆகவில்லை ! இதற்குள்ளாகவா...நன்றி ?

ஸ்ரீ வீராசாமி:—போகட்டும். நான் மேலுமொரு பிரச்னைக்கு இப்போது வருகிறேன்— அதாவது,

## குவார்டர்ஸ் வசதிகள்

அதுதான் குவார்ட்டர்ஸ் கட்டித்தருவதைப்பற்றி. நான்காம் வகுப்புச் சிப்பந்திகளில் வெகுபலபேருக்கு குவார்ட்டர்ஸ் வசதி இன்னும் செய்து தராமலேயே இருக்கிறது. அவர்களுக்கு தபாலாபீசுகளுக்கு அருகாமையிலேயோ அல்லது டெலிகிராப ஆபீஸிற்குப் பக்கமாகவோ குவார்டர்ஸ்கள் கட்டித்தரப்பட்டால், அவர்கள் ஆபீஸிற்குக் குறித்த காலத்தில் வருவதுமட்டுமல்ல ; தங்களின் வேலைகளையும் சரிவரச் செய்வார்கள் என்பது திண்ணம் ! இறுதியாக நான் பேச விரும்புவதெல்லாம் இந்த பென்ஷனைப் பற்றியவைகள்தான் !

## குடும்பப் பென்ஷன் வசதிகள்

சிப்பந்திகளுக்கு ஏதாவது கோளாறு நேரிட்டு, அவர் தன் 25 வருஷ சர்வீஸை முடிக்குமுன்பே இறந்துவிட்டால், அப்படிப்பட்டவர்களின் குடும்பங்களுக்கு எந்த ஒரு பென்ஷனும் இப்போது வழங்கப்படவில்லை. அந்த சட்டத்தில் உள்ளபடி— அதாவது இந்தப்படி—24 வருஷம் 11 மாதம் 29 நாள் அவர் வேலை பார்த்துவிட்டு ஒருநாளை இடைவெளியாக விட்டு அவர் இறந்துவிட்டாலும் அப்போதுங்கூட அந்த சிப்பந்தியின் குடும்பத்தினர் எந்த பென்ஷனையும் பெறத் தகுதியற்றவர்களாகத்தான் ஆக்கப்படுகிறார்கள். அவருக்குப் பிறகு அவர் மனைவியோ— அவரின் குடும்பமோ இந்த பென்ஷன் தொகையை வாங்கமுடியாது.

கனம் ஜெகஜீவன்ராம்: - இதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது !

ஸ்ரீ வீராசாமி:—இல்லை. இது விகிதாச்சாரமாக நிர்ணயிக்கப்பட்டில்லை! எனவே இது மிகவும் பரிதாபகரமான விஷயமாகும். ஒரு சில நூறு ரூபாய்களையும் தன் குடும்பத்திற்காக சேர்த்து வைக்கும் வாய்ப்பு ஒரு சிறிதும் இல்லாமல், திடீரென்று இறந்துவிடும் சிப்பந்தியின் குடும்பத்தினரிடம் இத்தகைய முறையில் இலாகா நடந்துகொள்வதானது கொஞ்சமும் நேர்மையும் இரக்கமற்றதாகவுமிருக்கிறது. இப்படி அவர்கள் தெருவில் விடப்பட்டால் —அதிலும் ஒருவிதமான உதவியுமளிக்கப்படாத நிலையில்—அவர்கள் நிலைமை என்னாகும் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டுகின்றேன் !

கனம் ராஜ்பகதூர்:—அவர்களுக்கும் பென்ஷன் வழங்கப்படுகிறது.

ஸ்ரீமதி சுசேதா கிருபாளினி:—எத்தனை வருஷ சர்வீஸுக்கும் பிறகு வழங்கப்படுகிறது ?

ஸ்ரீ வீராசாமி:—எனவே இது எவ்வளவு அவசியமாகிறது என்று எண்ணிப்பார்க்க வேண்டுகின்றேன்! ஆகவே இப்போதிலிருந்தாவது சிப்பந்திகளின் சர்வீஸைப் பொறுத்து விகிதாச்சாரமாகவாவது பென்ஷன் வழங்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இறுதியாக என்னுடைய கடைசி விண்ணப்பமும் ஒன்றிருக்கிறது. கனம் மந்திரியாரவர்கள் இந்த நாட்டின் தீண்டப்படாத மக்களின் உயர்விற்காக பாடுபட்டு வந்திருக்கிறார் —வருகிறார்—என்பது எனக்குத் தெரியும்! எனவேதான் இனிதைச் சொல்ல முன்வருகின்றேன். அவர் இதையும் கருணையுள்ளத்துடனும் அன்புடனும் கவனித்து ஆவன செய்வாரென்று நம்புகிறேன். எல்லா பிரிவு மக்களுக்கும் சமநீதி கிடைக்கச்செய்வதில் அவருக்கு நிரம்ப ஆர்வமுண்டென்பது எனக்குத் தெரியும். இந்த தபால் இலாகாவில் தாழ்த்தப்பட்ட வகுப்புக் கிளார்க்குகளைப் பொறுத்தமட்டில், நேசிய வகையில் தங்களின் பங்கைப் பெற்று வருகிறார்கள் என்பது

உண்மையிலேயே மகிழ்ச்சிக்குரியதாகும்! ஆனால் கிராமங்களின் போஸ்ட்மாஸ்டர்கள் வேலைகளைப் பொறுத்தமட்டில், இத்தகைய தாழ்த்தப்பட்டவர்களையே போஸ்ட்மாஸ்டர்களாகவும் நியமிக்கும்படி உத்திரவிடக் கேட்டுக் காள்ளுகிறேன். அப்படிச் செய்தால்தான், மேல்ஜாதிக்காரர்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்பவரும், ஜாதி இந்து என்று தங்களைத் தாங்களே உயர்த்திக்கொள்பவரும், கீழ் ஜாதிக்காரர்களின் தெருக்களுக்காவது போய் வருவார்கள்! அப்படிப் போய் வருவதாலாவது இந்த நாட்டில் பல தலைமுறைகளாக இருந்துவரும் ஜாதிக் கொடுமைகளுக்கும், தீண்டப்படாத கொடுமைகளுக்கும் ஒரு சவுக்கடி கொடுப்பதைப்போலவாவது விளங்கும். அதனால் ஓரளவுக்காவது தீண்டாமையின் தாமும் வெறியும் குறைந்ததுபோலவாவது விளங்கும். எனவேதான இதையாவது செய்ய வேண்டுமென்று அன்புடன் கேட்டுக்கொள்ளுவதோடு. கனம் மந்திரியாரவர்கள், நான் இதுகாறும் கூறிய முறையீடுகளுக்கு செவிசாய்த்து ஆவன செய்ய முன்வருவார் என்ற நம்பிக்கையுடன் எனது பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்—வணக்கம்.

---

**வேலையுயர்வைப்பற்றி**

போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் பிரத்தியேக சர்க்குலர்

எல்லா நிர்வாக அதிகாரிகளுக்கும்:

நெ 13 9-7-55

சென்னை

பொருள்: கிளார்க் கிரேடுகளுக்கு உயர்த்தப்பட நடத்தப்படும் பரீட்சைகள் பற்றி:

1. டைரக்டர் ஜெனரலின் கடித (No. SPB 20-89154/II தேதி 27-6-55) அதன் விவரங்கள் கீழே தரப்படுகிறது. இந்த சர்க்கிளில் லோயர் கிரேடுகளில் வேலை செய்யும் சிம்பந்திகளுக்காக இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது. டைரக்டர் ஜெனரலின் கடிதத்தில் கண்டுள்ளபடி லோயர் கிரேடு சிம்பந்திகளுக்கு அடுத்த வேலையுயர்வுப் பரீட்சை வரும் அக்டோபர் 9ம் தேதி நடைபெறவிருக்கிறது. டைரக்டர் ஜெனரலின் கடிதத்தில் முதல் பாராவில் சொல்லப்பட்டிருக்கிற விஷயங்கள் ஏற்கனவே, போஸ்மாஸ்டர் ஜெனரலின் ஸ்பெஷல் சர்க்குலர் நெ. 48 தேதி 8-1-54ல் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

2. இதில் கலந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் கீழ்கண்ட தகுதி பெற்றவர்களாக இருக்கவேண்டும். நிரந்தரமாக்கப்பட்டோர்களின் வரிசையில் இடம் பெற்றவர்களாகவோ—அல்லது 5 வருஷமோ அதற்கு மேலோ வேலை செய்து 'குவாஸி பர்மனென்ட்' என்று சொல்லக்கூடிய 'பாதி நிரந்தரத்துவம்' பெற்றுள்ளவர்களாகவோ—அவர்களிருக்க வேண்டும். அத்தகையவர்கள் பரீட்சையில் கலந்துகொள்ள விரும்பினால் அவர்களுக்குத் தங்களின் விண்ணப்பத்தை டிவிஷனல் அதிகாரிகளுக்கு அனுப்பவும், கடைசி தேதியாக, ஆகஸ்டு 12ம் தேதி இருக்கும். அதற்குள் அவர்கள் தங்கள் விண்ணப்பங்களை அனுப்பிவிட வேண்டும்—பரீட்சையில் கலந்து கொள்வதாக இருந்தால் !!

3. இப்படி இது விஷயமாகக் கேட்கப்படும் 5 வருஷ சர்வீஸ் என்பது விண்ணப்பதாரர்கள் தாழ்த்தப்பட்ட பிரிவினைச் சேர்ந்தவராகவோ மலை ஜாதியினராகவோ இருந்தால், நிச்சயமாகத் தேவை என்கின்ற அவசியம் கூட இல்லை! காரணம் அவர்கள் நிர்ணயிக்கப்பட்ட 12-8-55 என்ற நாளில் ஒன்று நிரந்தர சிப்பந்தியாகவோ, அல்லது பாதி நிரந்தரத்துவம் பெற்ற சிப்பந்திகளாகவோ, எப்படியும் இருந்தே தீருவார்கள் என்பதனால்தான்!

4. கீழ்கண்ட மற்றொரு அறிக்கையில், வருகின்ற 9-10-55 தேதிய பரீட்சைக்குண்டான காலி ஸ்தானங்களைப் பற்றிய மேல் விவரங்கள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. இந்த காலி ஸ்தானங்கள் இவ்விரண்டு பரீட்சையில் தேர்ச்சி பெறும் சிப்பந்திகளுக்காகவே—பல பிரிவுகளிலும் ரிசர்வ் செய்யப்பட்டவையாகும். அதுமட்டுமல்லாமல், எந்தப் பிரிவிலும் காலி ஸ்தானங்கள் குறிப்பிடப்பட்டில்லாமலிருந்தாலும் சிப்பந்திகள் அந்தப் பிரிவிற்காக பரீட்சையும் எழுதலாம். அப்படி அவர்கள் வேலை காலியில்லாத யூனிட்டுகளின் வாயிலாகவே பரீட்சை எழுதித்தேறினாலும், அவர்களுக்கு வேறெந்த யூனிட்டுகளிலிருந்தாலும் வேலை தேடிதரப்படும். ஆனால் இப்படி வேலை தேடித்தருவது டைரக்டர் ஜெனரலின் SPB 20-89/54 of 29-11-54 & 12-1-55 என்ற கடிதங்களில் கண்டுள்ள விதிமுறைகளையும் சட்டங்களையும் பொறுத்தேயிருக்கும்.

(ஒப்பம்) பி. கே. எஸ். சாரி
(பி. எம். ஜி.)

---

சென்னை 2.
9-7-55.

டைரக்டர் ஜெனரலின் இது சம்மந்தமான கடிதத்தின் விவரங்கள் கீழே தரப்படுகிறது. (27-6-55).

டைரக்டர் ஜெனரலின் கடிதம்:

SPB 20-89/54

புதுடெல்லி,
27-6-55.

எல்லா தலையதிகாரிகளுக்கும், தபால் இலாகாவின் நிர்வாகிகளுக்கும் (பிரின்ஸ்பால், சரன்பூர் டைரெயினிங் சென்டரைச் சேர்ந்திருக்கும்

பொருள்: இலாகாவின் சிப்பந்திகளைக் கிளார்க்குகளாகவும், மற்றும் அதே அந்தஸ்துள்ள மற்ற பிரிவுகளுக்கும்

உயர்த்துவதுபற்றியும் அதைத் தொடர்ந்த பரீட்சையைப் பற்றியும்:

இது சம்மந்தமாக இவ்வாயிலின் முந்திய கடிதமான SPB 20-67/57 of 19-12-53, என்பதையும் சிப்பந்திகள் கவனிக்க வேண்டப்படுகிறார்கள்.

2. சிப்பந்திகளின் வேலையுயர்வுக்காக நடத்தப்படும் பரீட்சையானது, இரண்டாவது தடைவயாக 9-10-55ல் நடைபெறவிருக்கிறது. இந்தப் பரீட்சை எல்லா சர்க்கிள்களிலும் நடைபெறும் அதாவது, எங்கெங்கெல்லாம் இது சம்மந்தமாக வேலைகள் காலியாகக் கிடக்கின்றனவோ—அல்லது எங்கெங்கெல்லாம் வேலைகள் இது விஷயமாகக் காலியாகும் என்று எதிர்பாக்கப்படுகின்றனவோ—அங்கெல்லாம் இப்பரீட்சை நடைபெறும். சென்ற தடவைநடந்த பரீட்சையைப்போலவே, எல்லோருக்கும் ஒரே அளவில் ஒரே தாரமுள்ளதும், ஒரேமாதிரியான கேள்விகள் நிரம்பியதுமான கேள்வித்தாள்களே வழங்கப்படும். இம்மாதிரியான கேள்வித்தாள்களை சரன்பூர் டெரெயினிங் சென்ட்டரே தயாரித்து மற்ற ஊர்களுக்கு அனுப்பவேண்டும் எனவே தான் பரீட்சைக்குப்போதிய அவகாசமும் அறிவிப்பும் வழங்கும் வகையில் பரிட்சையும் அக்டோபர் மாதத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. தலைமை யதிகாரிகள் இது சம்மந்தமாகக் குறிப்பிடப்பட்ட தேதியை மற்றவர்க்கு உடனடியாக அறிவிப்பார்களாக!

3. இப்போது அமுலிலிருக்கும் உத்திரவுபடி I பேபரில் பாகம் II ல், ஆங்கிலத்திலுள்ள கட்டுரையை இந்தியிலேயோ அல்லது அவ்வித பிராந்திய மொழிகளிலேயோ மொழிபெயர்த்து எழுதுவது எளிதாகும். ஆனால் இப்போது அரசாங்கத்தாரால் தீர்மானிக்க பட்டிருப்பதுபடி, ஆங்கிலத்தின் ஒரு தனிப்பகுதியை இந்தியிலேயோ, அல்லது மாவட்ட மொழிகளிலேயோ மொழி பெயர்த்து எழுதுமாறு மட்டுமே பரீட்சை யெழுதுபவர்கள் கோரப்படுவர்கள் ஆனால் இப்படித் தரப்படும் ஆங்கிலத்தின் தனிப்பாராவானது எந்த காரணத்தைக்கொண்டும் அநாவசியமான அளவில் கடுமையானதாகவோ—நீண்டதாகவோ—இருக்காது.

4 மேலும் பழைய பரீட்சை விதிகளையே அமுலாக்கலாமா அல்லது அவைகளில் சில பலவற்றைத் திருத்தி அமுலாக்கலாமா என்பதுபற்றிய பிரச்சனைகள் இன்னும் யோசனையிலும் விவாத ரீதியிலுமே இருந்துவருகிறது. இதுபற்றிய தீர்ப்பின் பரீட்சையின் முடிவுகள் பதில் தாள்கள் திருத்தப்படா முன்பு நிர்ணயிக்கப்பட்டுவிடும்.

5, பரீட்சையின் மற்ற கூறாத்துக்களெல்லாம் சென்ற ஆண்டு இருந்ததைப்போலத்தான் இவ்வாண்டுமிருக்கும்.

1955-56 ஆங் ராங்கே. கிளார்க்குகளுக்கும் மற்ற சம அந்தஸ்துள்ள கிரேடுகளுக்கும் காலியாக உள்ள ஸ்தானங்களைப்பற்றிய எண்ணிக்கைகள் தோராயமாகத்தரம்படுகிறது.

---

# டைரைக்டர் ஜெனரலின் அறிக்கை

No. SPB. 295-1/51.

18-5-55
புது டெல்லி.

எல்லா தலைமை அதிகாரிகளுக்கும்,
நிர்வாகிகளுக்கும்.

பொருள்: நான்காம் வகுப்பு வேலைகளுக்கும், பிரத்தியேக இலாகாவின் பிரதிநிதிகளை அமர்த்துவதுபற்றி:

ஆபிஸ் 3-10-51 தேதிய லெடரில் கண்டுள்ள விஷயங்களுக்குத் தொடர்புள்ளது.

சில ராஜ்ய வட்டங்களிலேயிருந்து நான்காம் வகுப்பு வேலைகளுக்கும், பிரத்தியேக இலாகாவின் சிப்பந்திகளையே அமர்த்திக்கொள்வதைப்பற்றியும் அவர்களுக்கு சீனியாரிட்டி வழங்குவதைப்பற்றியும் பல சந்தேகங்கள் எழுப்பப்படுகின்றன. இதுபற்றிய நிலைமை கீழ்வருமாறு விளக்கப்படுகிறது:—

நான்காம் வகுப்பு வேலைக்கு முதலில் பியூன் வேலைகளிலிருக்கும் பையன்கள் (Boy Peon) தேர்ந்தெடுக்கப்பட்டு, அங்கீகரிக்கப்பட்டோர் பட்டியலில் இடம் பெறுவார்கள். இவர்களுக்குப் பிறகுதான் பிரத்தியேக இலாகாவின் ஏஜெண்டுகள் (E. D. Staff) இடம் பெறுவார்கள். இப்படிவரும் பிரத்தியேக இலாகாவின், ஏஜெண்டுகள் வேலை தேடித்தரப்படும் ஸ்தாபனத்தின் மூலமாக வரவேண்டுமென்பது ஒன்றும் அவசியமில்லை. சீனியாரிட்டியைப் பொருத்தமட்டில், அவர்களுக்கு வெளியாருக்குத் அளிக்கப்படும் சலுகைதான் அளிக்கப்படும்.

இது விஷயத்தில் வெளியார்களைப் போலத்தான் அவர்கள் நடத்தப்படுவார்கள். இந்த நான்காம் வகுப்பு வேலைகளுக்கு பையன்களும் (பியூன்கள்) பிரத்தியேக இலாகாவின் ஏஜெண்டுகளும தகுதியாகக் கிடைக்காவிட்டால் அப்போதுதான் வெளியிலேயிருந்து ஆட்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படுவர்.

---

| தபால் டிவிஷனின் பெயர்கள் | | ரிசர்வ் செய்யப் பட்ட காலி ஸ்தானங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| பெங்களூர் B.G. H.O. | | 2* |
| (including) | | |
| பெல்லாரி | ,, | 32 |
| செங்கற்பட்டு | ,, | 10 |
| கிழக்கு தஞ்சாவூர் | | — |
| கோட்டயம் | ,, | — |
| சென்னை நகரம் வடக்கு | | 8* |
| சென்னை நகரம் தெற்கு | | 2* |
| மதுரை | | 23 |
| (Including) மதுரை H O. | | |
| மலபார் | ,, | 21 |
| மைசூர் | ,, | 25 |
| நீலகிரி | ,, | 49 |
| வட ஆற்காடு | ,, | 10 |

| ஊர் பெயர் | | எண்ணிக்கை |
|---|---|---|
| சேலம் | ... | — |
| தென்னாற்காடு | ... | 6 |
| தென் கன்னடம் | ... | 16 |
| தெற்கு மலபார் | ... | 5 |
| தஞ்சாவூர் | ... | 17 |
| திருச்சிராப்பள்ளி | ... | 6 |
| திரு நெல்வேலி | ... | — |
| திருச்சூர் | ... | 17 |
| திருவனந்தபுரம் | ... | 7 |
| கொயிலான் | ... | 16 |

**R. M. S. Divisons :.**

| | | |
|---|---|---|
| 'M' டிவிஷன் | ... | — |
| 'T' டிவிஷன் | ... | 15 |
| சென்னை சார்ட்டில் டிவிஷன் | ... | 3* |
| ,Q, டிவிஷன் | ... | 33 |

**First Class H.O S.**

| | |
|---|---|
| சென்னை G.P.O | 31 |
| **எஞ்சினியரிங் டிவிஷன்கள்** | |
| பெங்களூர் கிளார்க்குகள் | 18 |
| பெங்களூர் T. os. | 45 |
| சென்னை கிளார்க்குகள் | 23 |
| சென்னை T.os. | 56 |
| திருச்சிராப்பள்ளி கிளார்க்குகள் | 16 |
| திருச்சிராப்பள்ளி T.os. | 74 |
| கோயம்புத்தூர் கிளார்க்குகள் | 43 |
| Do T os. | 102 |
| திருவனந்தபுரம் கிளார்க்குகள் | 30 |
| Do Tos. | 71 |
| டெலிகிராப் ஆபிஸ் (கிளார்க்குகள்) | |
| பெங்களூர் | 8 |
| கோழிக்கோடு | — |
| சென்னை C.T.O | 8* |
| மதுரை | — |
| திருச்சி | — |
| மற்ற C.T.O. யூனிட்டுகள் | 3 |
| D.L.O. சென்னை | 2 |
| P. & T. மோட்டார் சர்வீஸ் | 2 |
| மவுண்ட்ரோட் சப் போஸ்டாபீஸ், சென்னை | 2 |
| கண்ட்ரோலர் டெலி ஸ்டோர்ஸ் சென்னை | — |

* இக்குறியிட்டுள்ளவைகளுக்கு விளக்கங்கள்

* இதுபோன்ற குறியுள்ள இடங்களின் தேவைகள் எல்லாம் பொதுவாக வெளியார்களே இங்கு அமர்த்தப்படுகிறார்களென்ற உண்மைக்கு போதிய அளவில் பரிகாரம் தேடும் வகையில், இலாகாவாகவே இத்தேவைகளை உண்டாக்கியிருக்கிறது. இவைகளெல்லாம் அவ்வந்த இலாகா பூர்வமான அதிகாரிகளால் அறிவிக்கப்பட்டதோ கௌரப்பட்டதோ அல்ல.

Publised by P M. Krishnan, No. 7, Coral Merchant Street and Printed by K. Duraiswamy Mudaliar, Alamu Printing Works, 173, Triplicane High Road, Madras-5 .